திருவாமாத்தூர் கௌமாரசபை வெளியீடு எண். 64.

உ

குருவே துணை.

# விழுப்புரம் - தோத்திரத் திரட்டு.



ஆசிரியர்:

மகான் - வண்ணச்சரபம்

அருண்மிரு - தண்டபாணி சுவாமிகள்

திருவாமாத்தூர்.

பதிப்பாளர்:

விழுப்புரம் - வெங்காயமண்டி

திரு. வை. சிவராம செட்டியார் அவர்கள்.

14 - 1 - 1964.



மகான் - வண்ணச்சரபம்

# அருண்மிகு - தண்டபாணி சுவாமிகள்

| | |
|---|---|
| தோற்றம்: | திருவருட்கலப்பு: |
| 28 - 11 - 1839. | 5 - 7 - 1898. |

உ

குருவே துணை

# முன்னுரை.

**"விழுப்புரம் தோத்திரத்திரட்டு"** என்னும் இவ்வரிய நூலுள் விநாயகருக்கு ஒரு பதிகமும், முருகப்பெருமானுக்கு ஒரு பதிகமுடன் இரண்டு திருப்புகழ்ப்பாடல்களும், சிவபெருமானுக்கு இரு பதிகங்களும், அம்பிகைக்கு ஒரு பதிகமும், திருமாலுக்கு ஒரு பதிகமுமாக ஆறு பதிகங்கள் அடங்கியுள்ளன. ஸ்ரீகயிலாசநாதரை 'விழுப்புரத்தில் வாழ்சிவனே' "விழுப்புரந்தனிலுறை விண்ணவனே" என்றும், ஸ்ரீபிரகந்நாயகியை "விழுப்புரத்தில் பொலிந்துவாழ் உமையே" என்றும், ஸ்ரீவைகுண்டவாசப்பெருமாளை "விழுப்புரத்தார் புரந்தருளும் விகிர்தமாலே" என்றும் பாடல்களிற் குறிப்பிடப்படுகிறது. ஏனைய இரு பதிகங்களும் ஷெ சிவாலயத்தின் அங்கமாயுள்ள விநாயகர், முருகப்பெருமான் ஆகிய கடவுளரைப்பற்றியவையாகும்.

**ஆசிரியர்:** மகான் - வண்ணச்சரபம், திருப்புகழ்ச்சுவாமிகள் முருகதாசசுவாமிகள் எனவழங்கும் அருண்மிகு-**தண்டபாணி சுவாமி**களாவர். இவர் 1839ம் ஆண்டில் திருநெல்வேலியிற்றோன்றி இளமைமுதல் முருகனருளால் தமிழ்க்கவிகள் பாடும் தன்மை வாய்ந்து, வேலாயுதப்பூசையை விருப்புடன் செய்து, சமய பேதச்சார்பற்ற நிலையில் தில்லைத் திருவாயிரம், திருவரங்கத்திருவாயிரம், பழனித்திருவாயிரம், ஏழாயிரப்பிரபந்தம், புலவர் புராணம், அறுவகை இலக்கணம் கௌமார முறைமை போன்ற சாத்திர, தோத்திர, இலக்கண, சரித்திர நூல்கள் பல பாடினர். பலதலங்கள் தோறும் சென்று பல பதிகங்கள் பாடியுள்ளனர்.

இவ்வாறு செல்லுமிடமெல்லாம் சீவகருணைக் கொள்கையை விளக்கி,

*கோவதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன்முன்*
*சாவதற்ற முத்திபதம் தந்தாலும் - மேவற்(கு). இசையேன்*

எனப் பெருமுழக்கமிட்டுத் தொண்டாற்றினர். பலருக்கும் அருட் குருவாகத்திகழ்ந்து, தவத்திலும், புலமையிலும், உபாசனையிலும் வல்ல பெரியோர்பலரை அருளினர். தமது திருக்கரம் கொண்டு பனைஓலைச்சுவடியில் எண்ணிலா நூல்

களை எழுதினர். அவையனைத்தும் இன்றும் பாதுகாப்பில் உள்ளன. இவ்வாறு செயற்கரிய செயல் பல ஆற்றி இறுதியில் சமயக்குரவர் மூவர், இரட்டைப்புலவர், அருணகிரிநாதர் போன்றவர்களாற் பாடப்பெற்ற திருவாமாத்தூர் சிவதலத்தில் எல்லை தாண்டா விரதமுடன் தங்கித்தவம் புரிந்து திருவாமாத்தூர்தலபுராணம், திருப்புகழ், பதிகங்கள் முதலியவை இயற்றி 1898ல் ஞானசமாதி கொண்டனர்.

## நூலமைப்பு.

**விநாயகர் பதிகம்:** விக்கினங்களைத்தீர்ப்பவன் விநாயகன் என்பதை இப்பகுதியில் "விக்கினேச்சுரனே" என்பதால் அறியலாம். கைமாறு வேண்டாக்கடப்பாடுமாரிட் டென்னுற்றுங் கொல்லோ உலகு (211) என்ற குறட்கருத்தை "மஞ்சாம் எனவே.............நெஞ்சார்" என்றும், "தாக்காண்மை .............நீக்கார்" என்றபாடலிலும் குறிப்பிடுவதுகாண்க.

**முருகன் பதிகம்:** விநாயகர், அம்பிகை, சிவன் இவர்கட்கு முக்கண்கள் உண்டு; முருகனுக்கு முக்கண்கள் இல்லை என்பாரை மறுத்து அக்கினிக்கண்ணிலே உதித்த முருகனுக்கு முக்கண் இல்லை என்பது எப்படி? "மூவாறு கண்ணுடையவனே முருகன்" என்பதைப்பலநூல்களிலும் இவர் கூறியிருப்பதைப்போலவே இதில் "அக்கினிக்கண்.......... என்ற 2 பாடலிலும், கொலைப்பூசைசெய்து வேடர் வழிபடுவதைச்சிறப்பித்துக்கூறிய நக்கீரைக்கற்குகையிலிருந்து காத்த முருகன் திருவுள்ளம், பிரம்மன் அருளிய வேதத்தில் கொலைசெய்து யாகம் செயல் நன்றென்றிருப்பது தகாது எனக்கருதும் என்னிடம் இரக்கம்காட்டவில்லையே என்ற கருத்தை 7ம்பாடலிலும் கூறுகிறார். 8, 9 பாடல்களில் இவரது சீவகருணையுள்ளத்தைத்தெரியலாம்.

**சிவன் பதிகம்:** முதற்பதிகம் சுந்தர மூர்த்திசுவாமிகள் அருளிய "நீள நினைந்தடியேன்" என்ற தேவாரப்பண்போலப் பாடப்பெற்றிருக்கிறது. திருவாமாத்தூர் சிவபிரான் தன்னை பாடினல் பல நலம்அருளுவதாகக்கூறினர் என்றும், அவ்வாறு தான் பாடியும் நலமருளாது ஏமாற்றினன் என்றும், அதைப்போல நீயும் என்னைஏமாற்ருமல் அருள்புரிகஎன்று 2 வது பாட்டிலும், சிறப்புற்ற பிள்ளைகளைப்பெற்றுள்ள நீ அடியேன் வேண்டும் விருப்பறிந்து உதவினல் உன்னை உலகம் ஏசிடுமோ என்று 9 வது பாட்டிலும் கூறியுள்ளார்.

இரண்டாவது பதிகத்தில் சுந்தரமூர்த்தி அடிகள் வேண்டிய போதெல்லாம் மிகவும் பொன்னளித்தாய்! அவ் வலிமை இப்போது உன்னைவிட்டகன்றதுவோ? மன முடைந்து தவிக்கும் அடியேன் நலம்பெறப் பொன் உதவுக என உரிமையுடன் இவர் வினவுதுகாண்க.

**அம்பிகை பதிகம்:** உன்னருட் புகழைப்பாடி மகிழாத சம்பந் தப்பெருமானுக்குச்சீர்காழியில் ஞானப்பால் அளித்து ஆட் கொண்டாய் அன்று; உன்புகழையேபாடும் என்மனம் மகிழக்காட்சியளித்து ஆட்கொள்ளாததேன் இன்று எனச் சுட்டிக்காட்டி வினவுவது குறிப்பிடத்தக்கதது.

**திருமால் பதிகம்:** இவர் அருளிய திருமகளந்தாதி என்ற நூலில், "மறியறுத்துண்கின்ற பொல்லார்க்கும் செம் பொன் வழங்கிடும் நீ, அறிவில் நிற்கும் தமியேற் கிரங் காமை அதிசயமே" என்று கூறுவதை ஒப்ப "பங்கயத்து .............என்ற 4 வது பாடலில் திருமகளுக்கு அறிவுரை கூறுமாறும், அறிவற்றவர்களைப்புகழ்ந்துபாடிப்பயன்பெறு பவர் உலகில்வாழ, உன்னருட்புகழையே பாடும் யான் ஏழ்மையால் வருந்தலாமோ எனவும் வேண்டுகிறார்.

**பதிப்பாளர்:** இவ்வரிய நூலின் பொருட்சிறப்பையும், நூலா சிரியரின் பெருமைகளையும் உணர்ந்து பேரன்பரும், இறை யருட்பக்தரும், வெங்காயமண்டி வணிகருமான விழுப்புரம் திருவாளர் **வை. சிவராம செட்டியார்** அவர்கள் பதித்து வெளி யிட்டுள்ளனர். பொருட்சிறப்பும், பக்திச்சுவையும், தமிழ்ச் சுவையும் உடைய இந்நூலைப்பதித்து வெளியிட்டுதவிய செட்டியார் அவர்கட்கும், படித்துப்பயன்பெறும் அன்பர் கட்கும் இறைவன் திருவருள் என்றும் நின்றுநிலவுவதாக.

திருவாமாத்தூர்.
விழுப்புரம் P O.
10--1—64.

இன்னணம்
**தி. மு. சங்கரலிங்கம்,**
தமிழாசிரியர்.
கௌமாரமடலயம்.

# பதிப்புப்பாயிரம்.

## கட்டளைக்கலித்துறை.

விழுப்புரத் திற்கயி லாசநா தர்க்கும் விரும்புமைக்கும்
முழுப்புல மைக்குக வேளுக்கும் ஐங்கர முன்னவற்கும்
பழுத்த சுவைத்தமிழ்ப் பாவால் முனந்தண்ட பாணிமுனி
அழுத்த மிகுமன்பி னுற்றுதிப் பாடல் அறைந்தனரே.

அன்றியும் வைகுண்ட வாசப்பேர் மாயவ னுர்தமக்கும்
நன்றிசை யும்பதி கம்பாடி னுர்அன்பர் நண்ணிடவே
துன்றிரு நாமக் கலைகளைத் தன்னிரு தோளிலணி
வென்றிபெற் றூர்தண்ட பாணிப் பெயர்புனை மேலவரே.

அத்தகைப் பாடல் களைஒன்று சேரநல் லச்சியற்றிப்
புத்தக மாத்தந் தவன், அந்த வூரிற் புகழ்மிகவே
சுத்த மனமும்நல் லீகையும் அன்பும் துலங்கக்கொண்ட
வித்தகன், நற்சிவ ராமப் பெயரினை மேயவனே.

வைகுண்ட வாசப் பெருமாள்கோ விற்கண், முன்
வண்மையுற
வைகும் படியுயர் ஆண்டாட்குக் கோவில் வயங்கச்செய்து
செய்கும்ப நீராட்டும் அன்பாற் புரிந்த சிறப்புடையான்
மெய்கொண்ட செல்வப் பயன்றேய் சிவராம
மேன்மையனே.

## வெண்பா.

நல்லார்வம் வாணிபத்தில் நண்ணவெங்கா யத்தினையே
எல்லாருங் கொள்ளமொத்தத் திற்கொண்டு - பல்வாரு
நல்குவியா பார நலமார் சிவராமன்
மல்குமின்பாய் வாழ்க மகிழ்ந்து.

*திருவாமாத்தூர்.*
*விழுப்புரம் P.O.*
14-1-64.

இன்னணம்,
*நூலாசிரியர் பெயரர்*
**தி. செ. முருகதாச ஐயா,**
கௌமாரமடாலயம்.

## சாத்துக்கவிகள்.

**காசிவாசி, இளவரசன்**

**திரு. நா. நடராசன் அவர்கள்**

**மத்தியஞான சிதம்பரம் (பரிக்கல்)**

அத்தன்மகன் அடிமறவா ஆமாத்தூர்
　　தண்டபாணி அருள்வே லேந்துஞ்
சித்தன்ஞர் விழுப்புரத்தூர் கடவுளர்மேல்
　　துதிப்பாக்கள் செப்ப லுற்ருர்
உத்தமத்தாய் மனேன்மணியும் உயர்வைத்திய
　　லிங்கமுஞ்செய் ஒப்பில் நோன்பின்
புத்திரனுஞ் சிவராமன் பதிப்பித்துத்
　　தந்தானிப் புவியில் வாழி.

---

## திருக்குறட் செம்மல் திரு. அ. அண்ணுமலேயார்

**(திருக்குறள் நிலேயம்) அவலூர்பேட்டை.**

செந்தமிழாம் மலர்மணத்துத் தெய்வஅருட்
　　டேன்சுவைக்கும் தெவிட்டா ஞானம்
அந்தமுறும் அருள்வடிவாம் ஆமாத்தூர்
　　தண்டபாணி அடிகள் வாக்காம்
பந்தமுறும் விழுப்புரப்பா; பாவலன்சங்
　　கரலிங்கம் பரிந்து சேர்த்துத்
தந்திட்டான் அச்சியிற்றித் தகைமைபெறு
　　சிவராமன் தழைத்து வாழி.

# நூலாசிரியர் அருளிய முக்கிய நூற்களுட் சில.

புலவர் புராணம்
திருவரங்கத்திருவாயிரம்
பழனித்திருவாயிரம்
தேவகோட்டை முருகன்பிள்ளைத்தமிழ்
சென்னை முருகன்பிள்ளைத்தமிழ்
தமிழலங்காரம்
வேலலங்காரம் முதலியன.
சடகோபர் சதகத்தந்தாதி
அருணகிரிநாதர் புராணம்
மயிலாசலக்கலம்பகம்
சூரியமாலை
சத்திய சூத்திரம் ஷ வாசகம்
இராமலிங்க அடிகளார் பதிகங்கள்
முதலியவை.

கிடைக்குமிடம்:

தி. செ. முருகதாச ஐயா,
கௌமாரமடாலயம்,
திருவாமாத்தூர்,
விழுப்புரம் P. O.



உ

கணபதி துணை.

# கணபதி பதிகம்.

## காப்பு - வெண்பா.

நீதி விழுப்புரத்தில் [1] நின்றவிக்கி னேச்சுரனே!
ஆதி முதலாகும் ஐங்கரனே!—கோதில்
கருணைவெள்ளத் தென்னைவிட்டுக் காமவெள்ளத்தெய்தும்
இருணலியச் செய்தருளின் றே.

## நூல்.

### வெண்டளைக்கலிப்பா.

பாடுந் தொழிலின் பயனடைந்தோர் பற்பலரிற்
கூடும் படிஎன் குறைதவிர்த்தின் (று) ஆண்டருள்வாய்!
நாடும் புலவோர் [2] நசையனைத்தும் நன்கருள்வார்
நீடும் விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 1

பார்வாழ வேண்டிப் பதைபதைக்கும் பண்பெனக்குச்
சேர்வான் நினைத்த திருவுளத்தான் நீயலையோ?
கூர்வாள் அவுணர் குடிகெடுத்தாய்! குட்டி நித்தம்
நேர்வார் விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 2

மைத்தகைய கண்ணார் வலையினிடை மாயாமல்
பத்தரொடு சேரும் பரிசெனக்கென் (று) ஈந்தருள்வாய்!
சித்தர் பெருமான் திருத்தொண்டர் போற்றிசைப்ப
நித்தம் விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 3

தாராள மாகத் [3] தனந்தருவார் என்னநம்பி
ஊராரைக் கெஞ்சி உழலாத வாறருள்வாய்!
காராழி போற்றிகழ்ந்து கைப்பின்றி மிக்கினிக்கும்
நேரார் விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 4

---

[1] நிலைத்து நின்ற; [2] விருப்பம்; [3] செல்வம்;

கஞ்சா அனைய களித்தருந்து வாரும்எள்ள
எஞ்சாத மெய்யருட்சீர் என்றெனக்(கு) ஈந் தாள்வோயோ
[1]மஞ்சாம் எனவே கைம் மாறுசற்றும் நாடாத
நெஞ்சார் விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 5

வாக்கால்அந் நாள்ஒருவன் வைததமிழ் பாடலுக்கு
மாக்காணம் ஈந்துளநின் வண்மையிந்நாள் மாறியதோ
தாக்காண்மை ஈகை தயைதாட் சணியம் என்ன
நீக்கார் விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 6

சேய கனகத் [2]திருமலையிற் பேர்த்தொருதுண் (டு)
ஈயஇசை யாதவன்சொல் என்றுதியேன் ஏற்றனையோ?
காயகந்தீர்ந் துண்மைக் கருணையைமேற் கொண்டொழுகும்
நேயர் விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 7

ஆற்றால் அரியோ (டு) அகத்தியனை ஆண்டபுகழ்
சாற்றார் எனநான் தவிக்கத் தகுங்கொல்லோ?
கூற்றாகிச் [3]சாரணரைக் கூர்ங்கழுவில் ஏற்றியவெண்
ணீற்றார் விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 8

வல்லா முலைக்[4]குறத்தி மால்பெருக்கும் வேலனுக் (கு)
உல்லாசம் ஈந்தாய்மிக் குன்னும்எனக் கின்னம் நல்கேல்
கொல்லா விரதம் குறியாத கோதர்நெஞ்சில்
நில்லாய்! விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 9

ஆங்காரம் தீர்ந்த அருட்பேற்றால் ஔவையொக்கும்
பாங்காரப் பெற்றும் படிபுகழ வாழ்வேனே!
ஓங்காரத் துற்றாய்! [5]உலகுண்டான் ஒப்பாருள்
நீங்காய்! விழுப்புரத்தில் நின்றவிக்கி னேச்சுரனே. 10

வீறார் விழுப்புரத்தில் மேவும்விக்கி னேச்சுரனை
ஆறான னத்தான் அடிமைத் [6]**திருப்புகழோன்**
கூறாசில் பாடலிவை கொள்ளுமவர் ஆரேனும்
பேறாம் அவைமுழுதும் பெற்றுமகிழ் பெட்பினரே. 11

*முற்றிற்று*

---

[1] மேகம் [2] மேருமலை [3] அமணர் [4] வள்ளி [5] திருமால்
[6] நூலாசிரியர் பெயர்களுள் ஒன்று



உ

முருகன் துணை.

# முருகப்பெருமான் பதிகம்.

## காப்பு - வெண்பா.

விழுப்புரத்து வேலா! என் வெண்டமிழ்ச்சொல் வேண்டில்
அழுத்தமுறும் லோபம் அகற்றிக்—கழுத்தளவில்
உள்ளதுன்பம் நீங்கற்(கு) உபாயமொன்று செய்தருள்வாய்
கள்ளமின்றி உண்மைசொன்னேன் காண்.

## நூல்.

### எண்சீர் விருத்தம்.

புள்ளிய மாமயிற் றோகையின் நீழல்
போதநிற் கருதும்என் புந்திபொல் லாதென் (று)
எள்ளிய தீயர்தம் மீதினும் சினவா (து)
இருக்குமிப் பொறுமைநிற் கென்றுவந் ததுவோ
[1] ஒள்ளிய வேற்படைக் கூர்மழுங் கினதோ
[2] உருத்திரன் [3] தீக்கணில் உதித்ததும் பொய்யோ
வெள்ளிய சேவலங் கொடியுடை யானே!
விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 1

அக்கினிக் கண்ணுனக் கில்லையென் றோதி
அம்பிகை கற்பினுக்(கு) அழிவமைக் கின்றார்
[4] நக்கிக ழும்படி நான்திரி கின்றேன்
நவின்றசொல் மறந்திவண் நாட்கழிக் கின்றாய்!
[5] கைக்கிளி என்றுபல் கனவினிற் சொன்ன
கருணை உன் றனைவிட்டுக் காடடைந் ததுவோ
[6] விக்கினந் தீர்ப்பவன் உடன்வரும் துணைவா!
விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 2

---

[1] *கூர்மையான* [2] *சிவன்* [3] *அக்கினிக்கண்* [4] *சிரித்து இகழ்தல்*
[5] *அருணகிரிநாதர்* [6] *விநாயகர்*

நீறுடை யார்சிவ ஞதியர்ப் பரமா
    நிகழ்த்தினும் இகன்றுனே நிதம்புகழ் என்பால்
[1]ஆறுநன் னெறியும்என் முகங்கள் என் ருேர்கால்
    அறைந்ததொவ் வொன்றுகொள் வார்வசை தரவோ
பேறுசற் றீந்திடில் அருள்வலி யுணரார்
    பிணக்கர்கண் டஞ்சுறப் பெரிதிலங் கேனே?
வீறுகுன் றந்தொறும் ஆடவல் லானே!
    விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 3

[2]கற்கிண(று) ஒன்றுதொட் டிடும்படி சொல்லிக்
    கனகம்நல் காதுவெம் கடன்கொளச் செய்து
பொற்குவை யுடையவர் ஊர்தொறும் ஏகிப்
    புண்படச் செய்வதும் புண்ணியந் தானே?
முற்கிளத் தியமொழி யொன்றுமெய் யானல்
    மூன்றுல குந்தொழும் முதன்மைகொள் ளேனே
விற்குனிப் பார்பலர் போற்றொரு தலைவா!
    விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 4

தனைப்புகழ் [3]பாவலற் குவகைமிக் குதவும்
    [4]தையல் நல் லாளிடந் தனித்தொரு தூதாய்
நினைப்பஎ லாமும்முன் கொடுத்தவன் சேய்தான்
    நீஎன நானுணர் நெறிசெய் ஒண் ணுதோ?
உனைப்பணிந் தேத்திடும் நான்பிறர் தம்பால்
    உற்றிரந் திடுமிழி(வு) உன்னைவிட் டிடுமோ?
வினைப்பயன் தீர்க்கவும் வல்லகண் ணனே!
    விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 5

நன்முகப் பசுக்கொலை யாதிய செய்வார்
    நானிலத் துவப்புற நான்அவர் கண்டு
புன்முகக் கவலையோ டலைவுற லாமோ?
    பொருக்கென மயிற்பரிப் புறத்தில்வந் தருளாய்
இன்முகக் [5]குறத்திசொற் குறியும்பொய் யாமோ
    இந்திரன் [6]மகள்உனக் கேதுஞ்சொல் லிளளோ
வின்முகப் பிறைச்சடைச் சிறுசிவன் போல்வாய்!
    விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 6

---

[1] ஆறு சமயங்கள் [2] நூலாசிரியர் வரலாற்றுள் ஓர் நிகழ்ச்சி [3] சுந்தரர் [4] பரவையார் [5] வள்ளி [6] தெய்வயானை

கடைப்படும் எயினர்செய் பூசைசொற் றேத்துங்
[1]கவிஞனும் உவப்புறக் காத்தநின் கருணை
புடைப்புறும் [2]வேதியன் நால்பகர் வேள்விப்
புலையும்வம் பேஎனப் புகலும்என் நெஞ்சில்
இடைப்பனித் துளியள(வு) எய்திடச் செய்தால்
இளப்பம் அன் றன்றுசற் றிரங்குதி! எழில்வெள்
விடைப்பரிக் [3]கிழவர்செய் தவத்துரு வானாய்!
விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 7

பண்டுயிர்க் கொலைபுரி யார்க்கழு வேற்றப்
பசுவதைப் பவர்குலப் [4]பாலகன் றன்பால்
மண்டுநின் கலை, கொலை முழுமையும் உலகில்
மாறிடல் வேட்ட என் மாட்டுறில் இழிவோ?
தொண்டுசெய் வார்க்கருள் சுரந்தொழு(கு) அமுதே!
சுரர்தரு நிழலிடை தொழஇனி(து) இருந்தாய்!
விண்டுவின் கண்மணி [5]யானவர் பாகா!
விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 8

நாரதன் வேள்வியில் வந்தசெந் [6]தகர்மா
நடவினை [7]ஆண்டலை நற்கொடி உயர்த்தாய்!
பாரவர் அவற்றினங் களை மிகக் கொல்லும்
பழிப்(பு) உனைச் சார்வது பார்த்துளம் அயர்ந்தேன்
சீரருட் டிவலைஒன் றென்மிசை தெறித்தாள்!
திருநெடு மால்முதல் திகழ்பல கோடி
வீரரும் புகழ்தரச் சூரனைத் தடிந்தாய்!
விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 9

அயன்நெடு மால் அரன் ஆதிய தேவர்
அனைவரும் நின்னருள் அன்றியின் றெனத்தேர்ந்(து)
இயல்கொடு போற்றிசைக் கின்றது கண்டும்
இரங்குகில் லாய்! [8]முனோர் ஏந்திழை [9]மடவாள்
கயல்விழி காணுற மயின்மிசை யேகிக்
கைகொடுத் தாய் எனும் கதைமுழுப் பிழையோ?
வியனுல குக்கொரு முகமெனத் துலங்கும்
விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 10

---

[1] நக்கீரர் [2] பிரம்மா [3] சிவன் [4] சம்பந்தர் [5] வள்ளி தெய்வயானை
[6] செம்மறி ஆடு [7] சேவல் [8] முன்னொருகாலத்தில் [9] முருகம்மையார்

[1]குரவரெல் லாரும்நின் வடிவெனத் தேறும்
குணங்கொடுத் தாய்! மிகக் கொழிதமிழ் கொடுத்தாய்
அரவெனச் சீறுபுன் மதத்தினர் தம்மை
அடக்கிமிக் குவப்புறும் ஆண்மைநல் காயோ?
இரவலர் போன்றயர் பாவமொன் றழித்தால்
ஏன்றமட் டருந்தவம் இயற்றுவன் அந்தோ
விரகரும் தவத்தரும் தொழப்பொது வானுய்!
விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனே. 11

குன்றமெல் லாம்கொளும் குருபரக் குகனைக்
கோமள மாதரைக் கொள்ளைகொள் வானை
மின்றயங் கிடைச் [2]சிவை கையக லானை
விழுப்புரந் தனில்வளர் வேல்முரு கோனைத்
தென்றல்வெற் பருகினிற் றிகழும்நெல் வேலித்
**திருப்புகழ்ப் பாவலன்** செப்புசொற் பாடல்
ஒன்றரு மைப்பொருள் உணர்வலார் தாமும்
உன்னிய பெரும்பயன் ஒருங்கடை வாரே. 12

*முற்றிற்று.*

# திருப்புகழ்ப்பா.

தனத்த தத்தன தானன தனனத் - தனதான.

அடக்கு ணத்திக லோர்குல மழியப் புரியேனே
அருக்க னைப்பழி யார்அரு ணெறிமிக்-குயராதோ
திடக்க ருத்துறு பாவலர் மிடிமுற்(று)-ஒழியாதோ
திருக்கை யிற்கொளும் வேலொடு மயிலிற்-றிகழ்
தடத்தி லுற்பவ மாகிவி ணவருக்-கருள்வீரா [வாயே
சகத்தி னுக்கநு கூலமெ னுநருக்-கெளியோனே
[3]விடக்கு ணத்தகு பாதகர் அறிதற்-கரியானே
விழுப்பு ரத்தினில் மேவிய குமரப்-பெருமாளே

[1] குரு; [2] பார்வதி; [3] புலை உணவு;

தனத்தனத் தான தானன - தனதான

அரக்கரைப் போலும் ஈனர்கள்
புலைப்பொருட் காசை யாய்நிதம்
அலைச்சலுற் றுவி சோர்வது - தவிராதோ
அலைக்கடற் போலும் வார்விழி
சிமிட்டிநிற் பார்கள் மாயையில்
அகப்படச் சூழ்வ தாம்வினை - நசியாதோ

குரக்கினைப் போல்வ தாம் மன
மயக்கினிற் கூடி டாதுயர்
குருத்துவத் தோர்கள் சார்பினில் - மகிழேனே
குதிக்குமுற் சாக மாமயில்
இடத்தினிற் [1]றேவி மாரொடு
குணக்கமற் றேகு லா [2] வயில் - கொடுவாராய்!

[3]தரக்கினைச் சாடி யே [4] அதள்
உரித்தசித் தேச னார்விழி
தனிற்கனற் சோதி யாவரு - முருகோனே
[5]சழக்கரைத் தீயர் வாழ்வற
முடிப்பதற் காமு னாள்ஒரு
தனித்தஒற் றுன மாயவன் - மருகோனே

விரத்திமெய்ச் சீல மேவிய
[6]ஒருத்தனுக் காவொர் தூணிடை
விருப்புடைக் [7]கோனும் நாடிட - வருவோனே
வியக்குநற் கோல மாதர்கள்
நடிக்குமைச் சோலை நீடிய
விழுப்புரத் தூரின் மேவிய - பெருமாளே.

தெய்வமே துணை.

முற்றிற்று.

---

[1] வள்ளி, தெய்வயானை [2] வேல் [3] யானை [4] தோல் [5] துரியோதனன்-ஆதியர் [6] அருணகிரிநாதர் [7] பிரபுடதேவனுக்குக் காட்சிதர முருகன் தூணில் உதித்த வரலாறு



உ

சிவமயம்.

# சிவபெருமான் பதிகம்.

### காப்பு - வெண்பா.

விழுப்புரத்தில் வாழ்சிவனே! மெல்லியலோர் பாகா!
மழுப்படைக்கை யானே! நின் வாஞ்சை-பழுத்திருந்தும்
ஏனருள்செய் கில்லாய்! எனமதியா திவ்வுலகத் (து)
ஈனர்களும் எள்ளுகின்று ரே.

### நூல்.

"நீளநினைந்தடியேன்" என்ற பண்.

இன்ன மிரங்கீரேல் துயர் எத்துணை நாட்சகிப்பேன்
அன்ன வயல் ஆரூர் தனில் அந்தணப் பாவலற்கா
முன்னம் நடத்தினவாம் செயல் முழுதும் பொய்யாமோ
பொன்னளித் தாண்டுகொள்வீர்! விழுப் புரத்தில் வாழ்
[சிவனே. 1

கொண்ட கடன்தீரும் படி குறித்து வாடுறு நான்
அண்டரும் எய்தரிதாம் திரு வருள்பெற் றுய்வேனோ?
வண்டமிழ்ப் பாடலுக்கா [1] விலை மகள்முன் தூதானாய்?
[2]புண்டரி கத்தடஞ்சூழ் விழுப் புரத்தில் வாழ்சிவனே. 2

ஆமாத் தூர்ச்[3]சிவன்போல் துதி யணிந்து கொண்டதன்பின்
ஏமாற் றத் துனியா (து) உளம் இரங்க வேண்டும்ஐயா!
பாய்மா ஈர்உரியீர்! மதி பழகும் வார் சடையீர்!
பூமா தோவருஞ்சீர் விழுப் புரத்தில் வாழ்சிவனே. 3

---

[1] பரவையார் [2] தாமரை [3] அபிராமேசுவரர்

கல்லா மானிடர்கைப் பொருட் காதல் மலிந்ததனுல்
உல்லா சங்குறைந்தேன் துதிக் குரிமை யுற்றதென்னே?
வில்லா [1]வெற்பெடுத்தீர்! நரை [2]விடையின் மேல்வருவீர்!
[3]பொல்லார் ஊர்எரித்தீர்! விழுப் புரத்தில் வாழ்சிவனே. 4

சித்தே வேண்டுறும்நான் பல சிறுவர் ஏசிடவே
பித்தே றும்குணத்தோன் எனப் பெரிது வாடல்நன்றே?
முத்தே விற்பெரியாய்! புனல் முழங்கும் சென்னிஎந்தாய்!
[4]புத்தே ளிர்க்(கு) அரியாய்! விழுப் புரத்தில் வாழ்சிவனே. 5

முன்னு ளிற்புலவோர் துதி மொழியுங் காற்செயும்கூத்(து)
என்னு ளிற்புரியா விதம் இயம்பி ஆண்டருள்வாய்!
பன்னு கப்பணியாய்! செழும் பவள மேனியப்பா!
புன்னு கப்பொழில்சூழ் விழுப் புரத்தில் வாழ்சிவனே. 6

தாங்கரும் பாழ்மிடியாற் செயும் தவமும் குன்றியநான்
ஓங்கருட் சீர்கொளற்காம் தினம் உதிக்கச் செய்வாயோ?
மாங்கனி யோர் இரண்டோர் [5]மகள் மகிழு மாறளித்தாய்!
[6]பூங்கணை யானை அட்டாய்! விழுப் புரத்தில் வாழ்சிவனே.7

குரவ னுதியரைக் கொலும் [7]கோல்[8]விழைந் தான்[9]அடி,
பரவு பாடலின்மே லெனிற் பாவமன்றே? பகரீர்! [யான்
[10]அரவ பூடணத்தீர்! கடல் ஆலம் உண் டும்பிழைத்தீர்!
புரவி யாம் நரியீர்! விழுப் புரத்தில் வாழ்சிவனே. 8

திண்ணிய மைந்தர்களைப் பெறுஞ் சீர்கொளும் நீர்தமியேன்
நண்ணிய பே(று) ஈந்தால் உமை நானிலம் ஏசிடுமோ
பண்ணியல் சொல்மடவாள் கொளும் பங்குடைச்சங்கரனே
புண்ணியர் பற்பலர்வாழ் விழுப் புரத்தில் வாழ்சிவனே. 9

நால்வர் அந்நாள்பெறும் சீரிடை நானொரு சற்றடைந்தாற்
கோல்வள மாதியெல்லாம் புவி கொண்டு மகிழாதோ
பால்வன நீறணிவீர்! மழுப் படையும் மானும் வைத்தீர்!
போல்வதில் லீர்!பொழில்சூழ் விழுப் புரத்தில் வாழ்சிவனே.

வயல்வ ளங்குறையா தருள் வாக்குடைப் பாவலர்போற்
புயல்பொ ழிந்திடும்சீர் விழுப் புரத்தில் வாழ்சிவனைச்
செயல்பெ றும்படியே புதுத் **திருப்பு கழ்ப்புலவோன்**
இயல்கொ டேத்தியபாட் டுரைத் தின்பம் எய்துமினே. 11

முற்றிற்று.

[1] மேருமலை [2] ரிஷபம் [3] திரிபுராதியர் [4] தேவர் [5] காரைக்கால் அம்மையார் [6] மன்மதன் [7] அம்பு [8] அருச்சுனன் [9] அவன் வில்லின் அடி [10] அரவு

# சிவபெருமான் பதிகம் [வேறு]

காப்பு - வெண்பா.

முழுப்புலவோர் கண்காண மூரி விடைமேல்
[1]மழுப்பிணையோ டேந்தி வரு வானை - விழுப்புரத்திற்
போற்று வதற்குப் புகர்வனப்பும் பூண்கோடும்
தோற்றுமுகத் தம்மான் துணை.

நூல்.

*கலித்துறை*

சுயம்புவென் (று) யாவரும் போற்றும்நின் றுண்
மலர்த் துதிசெயுநான்
[2]அயன்கரத் தால்வரைந் திட்டமை நாடிஇங் (கு)
அயரலாமோ
வயங்கிளர் முப்புரம் பொடிபட நகைசெய்த வாயுளானே
வியன்பொழில் சூழ்தரும் விழுப்புரந் தனில்உறை
விண்ணவனே.

மத்தக மால்கரி யனையபல் லோர்பகை வளர்தலால்இங்(கு)
எய்த்தலே வென்துயர் தீர்தரற் கோர்சிறி திரங்கொண்ணுதோ
புத்தமு துண்பவர் தம்முடல் வெண்பொடி பூசுமெந்தாய்!
வித்தகர் மேவிய விழுப்புரந் தனிலுறை விண்ணவனே.

பரவைதன் [3]கேள்வன்மிக் கின்புறு மாமிகப் பைம்
பொன்நல்கும்
உரமிழந் தாய்கொல்என் றுள்ளுடை வேற்கவண்
உதவொண்ணுதோ
[4]சிரவடம் பூண்டவிர் தோள்விரித் தாடிய செம்பொன்
வெற்பே!
விரதர்பல் லோர்வளர் விழுப்புரந் தனிலுறை விண்ணவனே.

சந்திர சேகர மாதிய சீர்பல தயங்கஎன்முன்
மந்திர மால்விடை மிசையுமை யாளொடும் வருவ
தென்றோ?
தந்திரத் தானவர் விரும்பிய பேறுமுன் தந்துளானே!
வெந்திறற் சேவகர் விழுப்புரந் தனிலுறை விண்ணவனே.

---

1 *மான்;* 2 *பிரம்மா;* 3 *சுந்தரர்;* 4 *தலைமாலை;*

பங்கய மங்கையர் அனையவர் மால்கொடு பரதவிப்பேன்
இங்கடி யார்பலர் சூழநின் கோயில்தோ றேகலென்றோ?
[1]கங்கண மாதிய பணியெனப் பாம்பணி காமருள்ளாய்!
வெங்கலி நோய்தவிர் விழுப்புரம் தனிலுறை விண்ணவனே

புள்வகிர்ந் தான்புவித் தலைபிறந் தால்எனப் பொலி
யும் வாழ்க்கை
கொள்வதற் காசைகொண் டுழைக்கும்இப் பேய்மதி
கொடுத்ததாரோ
[2]கள்வழி கொன்றையும் தும்பையும் ஆத்தியும்
கலந்துபூண்டாய்
வெள்வளை ஆர்புனல் விழுப்புரந் தனிலுறை விண்ணவனே

நிந்தைசொல் வார்மனைக் கடையினும் போய்
நனி நின்றுசோர்வேன்
சிந்தையில் வந்துமத் தீவினை நோயறச் செய்கில்லாயே?
பந்தையொப் பாமுலைப் [3]பார்ப்பதி யாளுறும் பங்குளானே
விந்தைமிக் கார்தரு விழுப்புரந் தனிலுறை விண்ணவனே.

[4]ஏடணை மூன்றினும் இடையறப்போய்ச்சுழல்ஈனனேன்றன்
பாடலி னாசைமிக் கெய்தியும்ஏன் எனைப் பார்க்கில்லாயோ
தாடலைமேலிடும் அவரையும் பகைத்துள [5]தனஞ்சயன்முன்
வேடனிற் சென்றனை விழுப்புரந் தனிலுறை விண்ணவனே

பரைதரு [6]பாலகன் இருவர்தம் மோடெனைப் பற்றியாண்டு
குரைகடல் சூழ்புவி முழுமையும் போற்றிசை
கொடுக்கவேண்டும்
[7]திரையெறிதண்புனற் செஞ்சடையாய்!அருட் சிவபிரானே
விரைமலி பூம்பொழில் விழுப்புரந் தனிலுறை விண்ணவனே

சொல்லியற்பாவலர்[8] நால்வரையாண்டெனைச்சுழலச்செய்த
நல்லிதயத்துனக் கழகென லாகும்கொல்! நன்குநோக்காய்
அல்லியும் தாமரைப் பூவும்மிக் கார்தடத் தருகுதோறும்
மெல்லியர் ஆடிய விழுப்புரம் தனிலுறை விண்ணவனே.

மேதகு சீர்திகழ் தொண்டைநன் னாட்டுறும் விழுப்பு ரத்தில்
[9]தாதகி மாலையைத் தலைவடத் துடன்அணி தம்பிரானைப்
பூதலம் போற்றிய நெல்லையிற் **திருப்புகழ்ப் புலவனோதும்**
ஏதமில் பாடல்கள் கற்பவர் கேட்பவர்க் கின்ப முண்டே.

முற்றிற்று.

---

[1] கையணி; [2] தேன்; [3] பார்வதி; [4] மண், பெண், பொன்;
[5] அருச்சுனன்; [6] விநாயகர். முருகன்; [7] அலை;
[8] சைவசமயக்குரவர்கள்; [9] ஆத்தி.



உ

தேவி துணை.

# உமையம்மன் பதிகம்.

### காப்பு - வெண்பா,

மெய்யடியார் போற்றும் விழுப்புரத்தில் மேவுசிவன்
மையலற இன்பநல்கும் மாதரசே! - பொய்யர்களை
வென்றுபுகழ் தோய்ந்து வினையொழித்த மேலவருட்
சென்றுவக்கு மாறெனை நீ செய்.

### நூல்.

#### அறுசீர்த்தாழிசை.

ஆடும் கூத்தன் தன்னை நின்னை யருளார் நின்புதல்வர்ப்
பாடும் போதுன் வடிவம் என்றே பலநா ளும் பகர், மால்
பீடும் கூறிற் சகியார் நாசம் பெறும்நாள் எந்நாளோ!
[1]பூடும் பெற்றாய் விழுப்புரத்திற் பொலிந்து வாழ்உமையே

அங்கண் ஞாலத் (து)அடியார் பல்லோர் அருள்பெற்
றுய்ந்தாராம்
எங்கண் மட்டில் இந்நாள் ஏன்நீ இரங்கு கில்லாயோ?
திங்கள் [2]சூடிக்(கு) உயிரே போலத் திகழும்சிற் பரையே!
பொங்கர் சூழும் விழுப்பு ரத்திற் பொலிந்து வாழ்உமையே

உன்னை நாடிக் கவிதை ஒன்றும் உரையா [3]ஒருபாலன்
தன்னைக் காழிப் பதியிற் பாலுந் தந்துஆட் கொண்டாயே!
என்னை யாளத் துணியா வாறேன்? இயம்பாய்! எண்கூறும்
பொன்னை வென்று விழுப்புரத்திற் பொலிந்துவாழ்உமையே

---

[1] *சிறுசெடி புல்பூடுஎன்பதுமரபு உயிர்கள் எல்லாவற்றையும் ஈன்றவள் உமையவளென்ற கருத்துப்பற்றியது;* [2] *சிவன்;* [3] *சம்பந்தர்.*

ஆலின் அருகில் உற்றபெம்மான் அருளார் நின்கொங்கைப்
பாலில்ஒரு சற்றளித்தென் பருவ ரற்றீர்த்தாள்!
[1]காலி யினங்கள் கோடி நாளும் கதறிச் சாங்கொல்லோ
போலி யின்றி விழுப்பு ரத்திற் பொலிந்து வாழ்உமையே.

[2]சோக மிஞ்சி வாடுமென்றன் தொண்டு கண்டும்நீ
தாக முற்ற பேறுநல்கத் தாம திப்பானேன்
[3]ஆக மதனிற் பாதி யாகி அரனுக்(கு) ஆனந்த
போகம் நல்கி விழுப்பு ரத்திற் பொலிந்து வாழ்உமையே.

அற்பர் நிந்தைச் சூடுண் டேங்கும் அடிமை அன்னோர்கள்
முற்ப டுமுன் அன்னோர்அஞ்ச மூர்க்கம் ஈந்தாள்வாய்!
கற்ப மைந்த [4]கோகி லம்போற் கலவ [5]மஞ்ஞைபோற்
பொற்ப மைந்து விழுப்பு ரத்திற் பொலிந்துவாழ்உமையே.

தெள்ளு தமிழ்ப்பா டலன்றிச் செய்யு மாறேரேன்
உள்ளு னருட் பார் வைதோய்ந்த துண்டோ? இன்றேயோ
கள்ளு மிழ்பூஞ் சோலை யென்றே காரார் கூந்தலிற்
[6]புள்ளுலாவ விழுப்பு ரத்திற் பொலிந்து வாழ்உமையே.

[7]வேத னாதி யைவர் போற்ற வேண்டும் பேறெல்லாம்
ஈத னீயென் றோரார் தம்மோ டென்னைச்சேர்த்(து)எள்ளேல்
[8]சாதலில்லார் இன்பமெய்தத் தருமம்எல்லாமும்
போதச்செய்து விழுப் புரத்திற் பொலிந்து வாழ்உமையே.

பாலளித்த தன்றிக்கங்கை [9]பால னுக்குக்கை
வேலதாயும் வென்றிநல்கும் வீறு சொல்வேனைச்
சீலமற்ற ஊனும் [10]நீரும் தின்று கொள்வாரைப்
போலஎள்ளேல் விழுப்பு ரத்திற் பொலிந்துவாழ்உமையே.

சங்க ரப்பேர் மாமுனிவன் தன்னை யாண்டாற்போல்
இங்கடிய னேனையும்நன் கேற்றுக்கொள்அம்மா!
அங்கவுணச் சேய்க்கும் அவ்வா றருளல்பொய்யாமோ?
புங்கமெய்தும் விழுப்பு ரத்திற் பொலிந்து வாழ்உமையே

ஆதரத்தால் அண்ட பிண்டம் அனைத்தும் நல்கியருட்
பூதநாதன் விழுப்பு ரத்திற் பொலிந்துவாழ்உமையைச்
சீத நன்னீர்ப் [11]பொருநை சூழுந் **திருநெல் வேலியினன்**
ஓதல்கற்றுச் சொல்லவல்லார்க்(கு) உவகை யுண்டாமே.

முற்றிற்று.

---

[1] பசு; [2] துயரம்; [3] உடல்; [4] குயில்; [5] மயில்; [6] வண்டு;
[7] பிரம்மன்முதலியஐவர் [8] தேவர்கள் [9] முருகன்; [10] கள் [11] தாம்பிரபரணி



உ
திருமால் துணை.

# திருமால் பதிகம்.

## காப்பு - வெண்பா.

மிக்கபுகழ்ச் சீர்சால் விழுப்புரத் தூர்மேயானைச்
சக்கரமும் சங்கும் தரித்தானை - அக்கரமெட் (டு)
உள்ளானைப் போற்றும் உறுதிநல்கும் உற்றதுணை
தள்ளாச் சடகோபன் றாள்.

## நூல்.

### அறுசீர் விருத்தம்.

மாதர்தரு மயலாய கடலிடைப்பட் (டு)
உழல்வேற் (கு) உன் [1]வனசப் பூநேர்
பாதமலர்ப் புணைகாட்டிப் பழவடியா
ருடன்கூட்டிப் பரிந்தென் றுள்வாய்!
சீதளநீர்க் கடலடைத்துச் சனகர்பிரான்
[2]மகள்துயரம் தீர்த்தாய்! செம்பொன்
[3]வேதனையுந் தியிற்பயந்தாய்! விழுப்புரத்தூர்
புரந்தருளும் விகிர்த மாலே. 1

பண்ணமைந்த நான்மறையும் பலகோடி
ஆகமமும் பகரும் உன்சீர்
எண்ணறியேன் புன்கவிக்கும் இச்சையுற்ற
வாறறியேன் இரங்கா தேனோ?
[4]பெண்ணரசி யாமெனச்சீர் உருச்சமைந்தும்
அமணரொல்கப் பெரிது போற்றும்
விண்ணவருக் கமுதளித்தாய்! விழுப்புரத்தூர்
புரந்தருளும் விகிர்த மாலே. 2

---

[1] தாமரை; [2] சீதை; [3] பிரம்மன்; [4] மோகினி.

வையமகள் அழக்கண்டும் இரங்கார்போற்
றுயில்கூரல் வழக்கன் றின்னே
கையணி [1]ஐம் படையொடுவந்த தருள்புரி! இன்
றேல்எனை நின் கண்ணுற் பாராய்!
செய்யவளும் கவுத்துவமும் புனத்துளவும்
மறுவொன்றும் திகழும் மார்பா!
வெய்யஅரா வணைக் கிடந்தாய்! விழுப்புரத்தூர்
புரந்தருளும் விகிர்த மாலே. 3

பங்கயத்துச் [2]செல்வியருட் கடைக்கண்எனைப்
பாராமற் பதிதர் ஆவார்
தங்களையே நோக்கிடக்கண் டுளம்குலைந்தேன்
அவட்கொருகாற் சாற்றொண் ணாதோ?
செங்கமல மலர்மலியும் கருங்கடல்போன்
றொளிர்வானே! சிவனே போலும்
வெங் [3]கலுழப் பரியூர்வாய்! விழுப்புரத்தூர்
புரந்தருளும் விகிர்த மாலே. 4

எண்ணெழுத்(து)என் றுரைக்குமிரு வகைக்குமொரு
துணையாவாள் எழுகூ றாகும்
மண்ணெளிதிற் றரத்தகுநின் மகன் [4]மனையாள்
எனத்தெளிந்துன் மலர்த்தாள் வேட்டேன்
புண்ணெரிநெஞ் சினனாகிப் புலர்தல்அழ
கோ? இரங்காய்! பொதுவ ரூரில்
வெண்ணெய்தயிர் கவர்ந்துண்டாய்! விழுப்புரத்தூர்
புரந்தருளும் விகிர்த மாலே. 5

சொற்பெருக்கும் சுவைப்பெருக்கும் பொருட்பெருக்கும்
அறியார்வாய் துதிக்காச் சில்லோர்
பொற்பெருக்கும் தரும்புவியில் உனைத்தினமும்
துதித்துள நான் புலர லாமோ?
கற்பெருக்கும் மழையினிடை கதறியழும்
[5]காலியொடு கன்றும் வாழ்வான்
விற்பெருக்கும் மலையெடுத்தாய்! விழுப்புரத்தூர்
புரந்தருளும் விகிர்த மாலே. 6

அடப்பான்மை [6]இகலவருக்(கு) அஞ்சியஞ்சிப்
பரதவிக்கும் அடிய னேனை
[7]மடப்பாவை யினம்புடைசூழ் மதனனுக்கும்
அஞ்சாது வாழச் செய்வாய்!

---

[1] வாள், வில், கதை, வாள், சங்கு; [2] திருமகள்; [3] கருடன்;
[4] கலைமகள்; [5] பசு. [6] பகைவர். [7] பெண்கள்.

தடப்பால்வந் தவருமெரி தரவெறிமூச்
    சொலிகாட்டும் தழலார் பேழ்வாய்
விடப்பாம்பின் மிசைநடித்தாய்! விழுப்புரத்தூர்
    புரந்தருளும் விகிர்த மாலே. 7
பாழதனிற் கழறிடுவார் பலர்வாழ
    நின்புகழே பழிச்சி நிற்பார்
தாழவரும் கொடுங்காலந் தமியேனுக்(கு)
    உடலளித்த தன்மை யாதோ?
காழரைமா மருதிடந்தாய்! கானகத்தின்
    வாவியிடைக் கதறிக் கூவும்
[1]வேழமதற் கருள்செய்தாய்! விழுப்புரத்தூர்
    புரந்தருளும் விகிர்த மாலே. 8
புண்சீழ்எய் தியதலையார் தமைக்கருங்கற்
    செக்கினிடைப் [2]போட்டோன் போலும்
வண்சீலத் தவராவார் வருமாறே
    கருதுமதி வகுத்த தாரோ?
கண்சீறி மதலையினைத் துயர்புரியும்
    [3]கனகனையோர் கணத்திற் சாய்ப்பான்
வெண்[4]சீயத் துருச்சமைந்தாய்! விழுப்புரத்தூர்
    புரந்தருளும் விகிர்த மாலே. 9
பதின்மர்தரு பாமாலை அணிதருநின்
    திருத்தோளிப் படிற்றுப் பாவி
துதியெனச்சொல் பேராசைக் கவியினையும்
    புனைதருநாள் துலங்கும் கொல்லோ
கதிருமிழ்சக் கரஞ்சங்கம் [5]கோதண்டம்
    நமன்நடுங்கும் கதைஎப் போதும்
விதிர்தனிவாள் கைக்கொண்டாய்! விழுப்புரத்தூர்
    புரந்தருளும் விகிர்த மாலே. 10
தண்கமல மலருடையாள் அகலாத
    மருமமுடைத் தலைவன் றன்னை
வெண்கடலிற் றுயில்வானை விழுப்புரத்தூர்
    புரந்தருளும் விகிர்த மாலைத்
திண்கவிஞர் அனைவோரும் அறிதருமெய்த்
    **திருப்புகழோன்** செப்பும் பாடல்
கண்கலுழ்பாழ் [6]மிடியகற்றிக் களிகூரும்
    பெருவாழ்வைக் காட்டு மன்றே. 11

*முற்றிற்று* *ஆழ்வார் திருவடிகளே சரணம்.*

---

[1] கசேந்திரன்; [2] ராமானுஜர்; [3] இரணியன்; [4] நரசிங்கம்; [5] வில்; [6] துயர்.

